# மருட்பாத் தூக்கில்லை

390. மருட்பா ஏனை இருசார் அல்லது

தானிது என்னுந் தன்மை யின்றே. (81)

# மருட்பாத் தூக்கில்லை

மருட்பாவுக்கு வெண்பாவின் செப்பலோசையும் ஆசிரியப் பாவின் அகவல் ஓசையும் வருவதல்லது தனக்குரியது என ஓர் ஓசையையுடையதன்று. மருட்பா, வெண்பா முன்னும் ஆசிரியவடி பின்னும் சேர்ந்து வருதலின் தனக்கென ஓசையில்லாத தாயிற்று.

# முடிப்பு

391. அவ்வியல் பல்லது பாட்டாங்குக் கிளவார். (82)

# முடிப்பு

செய்யுட்குரிய ஓசைகளை மேலே கூறப்பட்டவாறல்லது தாம் வேண்டியவாறு கூறார். அஃதாவது பாவென்பது தூக்கால் ( ஓசையால் ) அமைவது; செய்யுள் என்பது காத்தூக்கால் செய்யப்படுவது. அதனால் பாவகை வெண்பா, ஆசிரியம், கலி, வஞ்சி என நான்காம். பாவகையான அந் நான்கு செய்யுளோடு வெண்பா ஆசிரியம் கலி வஞ்சி என நான்காம். பாவகையான அந்நான்கு செய்யுளோடு வெண்பா ஆசிரியம் இரண்டாலும் செய்யப்படும் மருட்பாச் செய்யுள் ஒன்று சேர்ந்து செய்யுள்வகை ஐந்தாம்.

# முடிப்பு

நான்கும் ஐந்துமான அவ்வியல்பினல்லது வேறுவகையில் பாவாகவோ செய்யுளாகவோ புனைதல் இல்லை என்பது. சீர் தளை முதலிய கொண்டு உரை, நூல் முதலிய யாப்புகள் செய்யப்படினும் அவையெல்லாம் உரைப்பா, நூற்பா முதலிய பெயரானே வழங்கப்படும். சிலப்பதிகாரத்தில் உரை உரைப்பாட்டு வருவதும், தொல்காப்பியச் சூத்திரங்கள் நூற்பா எனப்படுவதும் கண்டு தெளிக.

# தூக்கியல் வகை

392. தூக்கியல் வகையே ஆங்கென மொழிப. (83)

# தூக்கியல் வகை

மேலே சொல்லப்பட்ட அகவல், செப்பல், துள்ளல், தூங்கல் என்னும் பாக்களின் ஓசைவகை அந்நான்கே; பிறவில்லை என்பர், இக்காலத்து வரும் புதுக்கவிதைகளும் நான்கில் பெரும்பாலும் ஆசிரியத்து அடங்கும் என்க. சில உரைச்செய்யுளுமாம். எதிலும் அடங்காத புதுக்கவிதைகளைப் புதுக்கவிதையென்றே ஒழிக.

# 9. தொடை – அடிதோறும் வரும்வகை

393. மோனை எதுகை முரணே இயைபென

நால்நெறி மரபின தொடைவகை என்ப. (84)

# 9. தொடை – அடிதோறும் வரும்வகை

தொடைவகை மோனை, எதுகை, முரண், இயைபு எனும் நான்கு மரபினையுடைய, அளபெடைத் தொடையும் உண்டு, அது சிறப்புடைத்தன்று என்பார் எடுத்துக் கூறினார். இவை யாவும் செய்யுளின் அடிகளில் வருவன. மேல்வரும் மோனை முதலியன ஓரடிக்கண் சீர்களில் வருவன.

# அளபெடை தலைப்பெய

394. அளபெடை தலைப்பெய ஐந்தும் ஆகும். (85)

# அளபெடை தலைப்பெய

அளபெடை என்பதொன்று கூட்டத் தொடை ஐந்தாகவும் கூறப்படும்.

# அடிச்சீர்களில் வரும் தொடைகள் (விகற்பம் )

395. பொழிப்பும் ஒரூஉஞ் செந்தொடை மரபும்

அமைந்தவை தெரியின் அவையுமா ருளவே. (86)

# அடிச்சீர்களில் வரும் தொடைகள் (விகற்பம் )

செய்யுளின் ஓரடியில் பொழிப்புத்தொடை, ஒரூஉத் தொடை, செந்தொடை, மரபுதொடை ஆகியவையும் வரும் என அமைத்தனர்; தெரியுங்கால் அவையும் தொடைகளாதற் குரியனவாம்.

# இரட்டை யாப்பு

396. நிரனிறுத் தமைத்தலும் இரட்டை யாப்பும்

மொழிந்தவற் றியலான் முற்றும் என்ப. (87)

# இரட்டை யாப்பு

நிரல்நிறைத் தொடையும் இரட்டைத் தொடையும் ஆகிய இரண்டும் மேற்சொல்லப்பட்ட வற்றோடும் சேரும் என்பர், நிரல்நிறைத் தொடையாவது ஒரு செய்யுளில் இரண்டும் பலவுமான எழுவாய்களை பொருள்களை வரிசையாக வைத்து அவற்றின் செயல்களை - பயன்களை அவற்றின் வரிசைக்கேற்ப வரிசைப்படுத்தி வைத்தல்.

# இரட்டை யாப்பு

இரட்டைத்தொடை என்பது ஓரடி முழுதும் வந்த மொழியே வருமாறு தொடுப்பது.

அடல்வேல் அமர்நோக்கி நின்முகம் கண்டே

உடலும் இரிந்தோடும் ஊழ்மலரும் பார்க்கும்

கடலும் கனையிருளும் ஆம்பலும் பாம்பும்

தடமதி யாம் என்று தாம்.

இதில் கடல் உடலும், இருள் ஓடும், ஆம்பல் மலரும், பாம்பு  பார்க்கும் என நிரல்படுத்தப்பட்டமை காண்க.

# இரட்டை யாப்பு

ஒக்குமே ஒக்குமே ஒக்குமே ஒக்கும்

விளக்கினிற் சீரெரி ஒக்குமே ஒக்கும்

குளக்கொட்டிப் பூவின் நிறம். ”

இதில் இரட்டைத் தொடை வந்தமை காண்க.

# அடிதொறும் மோனை.

397. அடிதொறும் தலை எழுத்து ஒப்பது மோனை. 88

# அடிதொறும் மோனை.

செய்யுளின் அடிதொறும் முதற்சீரின் முதல் எழுத்து ஒன்றாகப் பொருந்திவரத் தொடுப்பது அடிமோனைத் தொடை எனப்படும்,

மாவும் புள்ளும் வதிவயிற் படர

மாநீர் விரிந்த பூவும் கூம்ப

மாலை தொடுத்த கோதையும் கமழ

மாலை வந்த வாடையும்

மாயோய் நின்வயின் புறத்திறுத் தன்றே.

# எதுகைத்தொடை

398. அஃதொழித் தொன்றின் எதுகை ஆகும். (89)

# எதுகைத்தொடை

அஃதேல் முதலெழுத்தும் ஒன்றி இரண்டாமெழுத்தும் ஒன்றில் யாதாகு மெனின், முந்துற்ற மோனையாற் பெயரிட்டு வழங்கப்படும் என்க.

# எதுகைத்தொடை

அடிதாங்கும் அளவின்றி அழலன்ன வெம்மையாற்

கடியவே கனங்குழாஅய் காடென்றார் அக்காட்டுள்

துடியடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப்

பிடியூட்டிப் பின்னுண்ணுங் களிறெனவும் உரைத்தனரே (கலி. 11)

# எதுகைத்தொடை

399. ஆயிரு தொடைக்குங் கிளையெழுத் துரிய. (90)

# எதுகைத்தொடை

மோனை எதுகையாகிய இரண்டு தொடைகளுக்கும் அவ்வவ் வெழுத்தேயன்றி அவற்றின் இன எழுத்துகளும் வருதற்குரியன.

யாகாவா ராயினும் நாகாக்க காவாக்கால்

சோகாப்பர் சொல்லிழுக்கப் பட்டு

இதில் நெடில் இன மோனை வந்தது.

# எதுகைத்தொடை

அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய்

நின்றது மன்னவன் கோல்

இதில் நகரத்துக்கு னகரம் இனவெழுத்தாக வந்து இன எதுகையாயிற்று.

# எதுகைத்தொடை

இனவெழுத்தாவன: குறில், நெடில், வலி, மெலி, இடை எழுத்துகளும் அகரத்துக்கு ஆகாரமும் ஐகாரமும், சகரத்துக்குத் தகரமும், ஞகரத்துக்கு நகரமும், மகரத்துக்கு வகரமும் ஆம்.

# முரண்தொடை

400. மொழியினும் பொருளினும் முரணுதல் முரணே. (91)

# முரண்தொடை

சொல்லாலும் பொருளாலும் மாறுபடத் தொடுப்பது முரண்தொடை.

"சிறுகுடிப் பரதவர் மடமகள்

பெருமதர் மழைக்கணும் உடையவால் அணங்கே. "

இதில் சிறு எனும் சொல்லுக்குப் பெரு என்பது முரண்.

# முரண்தொடை

இரும்பின் அன்ன கருங்கோட்டுப் புன்னை

பொன்னின் அன்ன நுண்தா துறைக்கும்."

இதில் இரும்புக்குப் பொன் பொருளால் முரணாயிற்று.

# இயைபு தொடை

401. இறுவாய் ஒப்பினஃ தியைபென மொழிப. (92)

# இயைபு தொடை

அடிதோறும் இறுதி எழுத்து ஒன்றிவரின் அஃது இயைபு தொடை என்பர்.

சூரல் பம்பிய சிறுகான் யாறே

சூரர மகளிர் ஆரணங் கினரே

வாரல் எனினே யானஞ் சுவலே

சாரல் நாட நீவர லாறே

இதில் அடிதோறும் இறுதிச்சீர் ஏகார இறுதிபெற்று அடிமோனையாயிற்று.

# இயைபு தொடை

"இன்னகைத் துவர்வாய்க் கிளவியும் அணங்கே

நன்மா மேனிச் சுணங்குமார் அணங்கே

ஆடமைத் தோளி கூடலும் அணங்கே

அரிமதர் மழைக்கணும் அணங்கே

திருநுதற் பொறித்த திலதமும் அணங்கே."

இதில் அடிதோறும் இறுதிச் சீரே ஒன்றி வந்துள்ளது. எதுகை முதலியவற்றுக்கும் உதாரணம் காண்க.

# அளபெடைத்தொடை

402. அளபெழின் அவையே அளபெடைத் தொடையே. (93)

# அளபெடைத்தொடை

அடிதோறும் அளபெடை வரத் தொடுப்பது அளபெடைத்  தொடையாம்,

கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய் மற்றாங்கே

எடுப்பதூஉம் எல்லாம் மழை.

# பொழிப்புத் தொடை

403. ஒருசீ ரிடையிட் டெதுகை யாயின்

பொழிப்பென மொழிதல் புலவர் ஆறே. (94)

# பொழிப்புத் தொடை

ஓரடியில் உள்ள நாற்சீரில் ஒருசீர் இடையிட்டு எதுகை வரத் தொடுப்பது பொழிப்பு எதுகைத்தொடை எனப்படும். எதுகைக்கு கூறினாராயினும் மோனை முதலியவற்றிற்கும் கொள்க.

"அரிக்குரற் கிண்கிணி அரற்றும் சீறடி"

இது பொழிப்புமோனை.

# பொழிப்புத் தொடை

"பன்னருங் கோங்கின் நன்னலம் கவற்ற"  - இது பொழிப்புஎதுகை.

“சுருங்கிய நுசுப்பில் பெருகுவடம் தாங்கி”  - இது பொழிப்புமுரண்.

கானலங் கழியே கைதையந் துறையே  - இஃது இறுதிச் சீரிலிருந்து நோக்கப் பொழிப்பு இயைபாம்.

"பூஉங் குவளைப் போஒ தருந்தி”  - இது பொழிப்பளபெடை.

# ஒரூஉ

404. இருசீர் இடையிடின் ஒரூஉவென மொழிப. (95)

# பொழிப்புத் தொடை

நாற்சீரடியுள் இருசீர் இடையிட்டு வருவது ஒரூஉத் தொடை  என்று கூறுவர்,

" அம்பொற் கொடிஞ்சி நெடுந்தேர் அகற்றி "  -- இது ஒரூஉமோனை.

" மின்னிவர் ஒளிவடம் தாங்கி மன்னிய  - இது ஒரூஉ எதுகை.

" குவிந்துசுணங் கரும்பிய கொங்கை விரிந்து ”  - இது ஒரூஉமுரண்.

" நிழலே இனியதன் அயலது கடலே.  - இது ஒரூஉ இயைபு.

" காஅய்ச் செந்நெல் கறித்துப் போஒய்  - இது ஒரூஉ அளபெடை.

# செந்தொடை

405. சொல்லிய தொடையொடு வேறுபட் டியலின்

சொல்லியற் புலவர் அது செந்தொடை என்ப.. (96)

# செந்தொடை

மேற்சொல்லப்பட்ட அடிவகைத் தொடையும் சீர்வகைத் தொடையும் ஆகியவற்றில் ஒன்றினொடும் ஒவ்வாது வரின் அது செந்தொடை என்பர் புலவர்.

"பூத்த வேங்கை வியன்சினை யேறி

மயிலின மகவு நாடன்

நன்னுதற் கொடிச்சி மனத்தகத் தோனே.”

# தொடைவிரி

406. மெய்பெறு மரபின் தொடைவகை தாமே

ஐயீ ராயிரத் தாறைஞ் நூற்றொடு

தொண்டுதலை யிட்ட பத்துக்குறை யெழுநூற்

றொன்பஃ தென்ப உணர்ந்திசி னோரே. (97)

# தொடைவிரி

இளம்பூரணர் கூறுமாறு:

ஐயீராயிரத் தாறைஞ்நூறு 13,000

தொண்டு தலையிட்ட பத்துக்குறை எழுநூற்றொன்பது 699

(ஒன்பதைக் கூட்டிய பத்துக்குறைந்த எழுநூற்றொன்பது) 13,699

# தொடைவிரி

407. தெரிந்தனர் விரிப்பின் வரம்பில ஆகும். (98)

# தொடைவிரி

தொடைவகைகளை ஆராய்ந்து விரித்துரைப்பின் எல்லை கடந்தனவாகும்,

# தொடைவிரி

408. தொடைநிலை வகையே யாங்கென மொழிப. (99)

# தொடைவிரி

தொடைகளின் வகைகள் மேற்சொல்லப்பட்டவாறே அமையும் என்பர்.

# 10. நோக்கு

409. மாத்திரை முதலா அடிநிலை காறும்

நோக்குதற் காரணம் நோக்கெனப் படுமே (100)

# 10. நோக்கு

மாத்திரை முதல் அடிவரை கூறப்பட்டனவற்றைச் செய்யுளில் பொருட்பொருத்தமுற நோக்குதலாகிய காரணம் நோக்கு எனப்படும்.

# 10. நோக்கு

நோக்குதலாகிய காரணம் என்றது , கூறுவான் செய்யுளைக் கேட்பவன் பயன்கொள்ளுமாறு அமையும் நோக்கத்தினை. பயன் கொள்ளுதலாவது செய்யுட் பொருளையறிதலாகிய பயன் கொள்ளுதலோடு சொற்றொடர்ச் சிறப்பு (நயம்) முதலியன காணலும் ஆம்.

# 11. பா

410. ஆசிரியம் வஞ்சி வெண்பாக் கலியென

நாலியற் றென்ப பாவகை விரியே. (101)

# 11. பா

பாவினது வகையை விரிக்கும் காலத்து ஆசிரியம், வஞ்சி, வெண்பா, கலி என நான்கு வகையுடைத்து என்று சொல்லுவர். ஆசிரியம் கட்டளையடி வகையில் பதினேழ் நிலத்தும் வருதலாலும், பெரும்பான்மையாகப் பலராலும் செய்யப்படுதலாலும், அடிப்பரப்பு மிகையாலும் அகவும் இனிய ஓசை காரணத்தாலும் முன்னர்க் கூறப்பட்டது.

# 11. பா

வஞ்சிப்பா ஆசிரிய நடைபோல் வருவதாலும், இறுதி ஆசிரிய வடிகளால் முடிதலாலும் ஆசிரியப்பாவை அடுத்து வைக்கப்பட்டது. வெண்பா, அடிவரையறைக் குட்பட்டதாலும் அவற்றின் வேறுபட்ட ஓசையது ஆதலாலும் பின் கூறப்பட்டது. கலிப்பா, வெண்பாச்சீர் பயின்று வருதலாலும் வெண்பாவுறுப்பாகவும் (கலிவெண்பா) வருதலாலும் வெண்பாவின் பின் வைக்கப்பட்டது.

# 11. பா

411. அந்நிலை மருங்கின் அறமுத லாகிய

மும்முதற் பொருட்கும் உரிய வென்ப. (102)

# 11. பா

மேற்சொல்லப்பட்ட பாக்கள் அறம், பொருள், இன்பம் என்னும் மூன்று முதற்பொருட்கும் உரியன என்பர்.

இது, பாக்களுக்குப் பொதுப்பொருள் கூறப்பட்டது. பின்னர் இன்ன பா இன்ன பொருட்குரியது என்பது கூறப்படும்.

# நான்கு பாவும் இருவகையாமாறு

412. பாவிரி மருங்கினைப் பண்புறத் தொகுப்பின்

ஆசிரி யப்பா வெண்பா என்றாங்

காயிரு பாவினுள் அடங்கும் என்ப. (103)

# நான்கு பாவும் இருவகையாமாறு

நான்கு விரியாக அமைந்த பாக்களை ஒன்றனுள் ஒன்றைஅடக்கித் தொகுப்பின் ஆசிரியப்பா, வெண்பா எனும் இரண்டனுள் அடங்கும் என்பர்.

# ஆசிரியமும் வஞ்சியும்

413 . ஆசிரிய நடைத்தே வஞ்சி ஏனை

வெண்பா நடைத்தே கலியென மொழிப. ( 104 )

# ஆசிரியமும் வஞ்சியும்

ஆசிரிய நடையுடையது வஞ்சி; ஆதலின் வஞ்சி ஆசிரியத்துள் அடங்கும் . வெண்பா நடையுடையது கலி; ஆதலின் கலி வெண்பாவில் அடங்கும். நடை என்றது பாக்களின் ஓசைநடை.

# வாழ்த்தியல் பாக்கள்

414. வாழ்த்தியல் வகையே நாற்பாக்கும் உரித்தே .

(105)

# வாழ்த்தியல் பாக்கள்

வாழ்த்துதற் பொருள் நான்கு பாவிற்கும் உரித்து. வாழ்த்து , தேவர் , மக்கள் முதலாக மழைபோலும் அஃறிணைப் பொருள்வகை யுள்ளனவற்றுக்கு ஆம் .

வகை: தனக்குப் பயன்பட வாழ்த்துதல், பிறர்க்குப் பயன்பட வாழ்த்துதல், முன்னிலைப்படுத்தி வாழ்த்துதல், படர்க்கையில் வாழ்த்துதல் முதலியன.

# புறநிலை வாழ்த்து

415. வழிபடு தெய்வம் நிற்புறங் காப்பப்

பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து

பொலிமின் என்னும் புறநிலை வாழ்த்தே

கலிநிலை வகையும் வஞ்சியும் பெறாஅ . (106)

# புறநிலை வாழ்த்து

) நீ வழிபடும் நின் குலதெய்வம் நின்னைப் புறத்தே நின்று காப்பக் குற்றம் தீர்ந்த நல்வழியால் வந்த செல்வத்தோடே வழிவழியாகப் பொலிவு பெற்று வாழ்க என்னும் புறநிலை வாழ்த்தானது கலிப்பாவும் வஞ்சிப்பாவும் பெறாது

# புறநிலை வாழ்த்து

416. வாயுறை வாழ்த்தே அவையடக் கியலே

செவியறி வறூஉ என அவையும் அன்ன. (107)

# வாயுறை வாழ்த்து

417. வாயுறை வாழ்த்தே வயங்க நாடின்

வேம்புங் கடுவும் போல வெஞ்சொல்

தாங்குதல் இன்றி வழிநனி பயக்குமென்று

ஓம்படைக் கிளவியின் வாயுறுத் தற்றே (108)

# வாயுறை வாழ்த்து

வாயுறை வாழ்த்தை விளங்க ஆராயின் வேம்பினையுங் கடுவினையும் போல வெஞ்சொ லடக்காது பிற்பயக்குமெனக் கருதிப் பாதுகாவற் கிளவியானே மெய்யறிவித்தல் என்றவாறு.

# வாயுறை வாழ்த்து

வாயுறை வாழ்த்தாவது யாதென விளங்க ஆராயின் முன் கசந்து பின் நற்பயன்தரும் வேம்பும் கடுவும் போன்று கேட்குங்கால் இன்னாமையும் கேட்டு நடப்பின் இனிமையும் தரும் கடுஞ்சொற்களால் தடையில்லாமல் பிற்காலத்துப் பயன்தரும் என்ற பாதுகாப்புச் சொற்களால் , ஒருவன் தன் வாய்மூலம் பிறனுக்கு உறுத்துவது. வாயுறை வாயால் உறுத்துதல். வாய்மொழியால் வலியக் கூறுதல். வலியுறுத்திக் கூறுதல் என்பதால் கேட்போனுக்கு அது அப்போது வெறுப்பைத் தருவது என்பது பெறப்படும். பிற்காலத்து அது நற்பயன் தருவதால் வாழ்த்தாயிற்று .

# வாயுறை வாழ்த்து

“ உலகிற் பிறந்தார் ஒருவரும் நிலையார்

உலகின் நீயூம் ஒருநரள் இறப்பாய்

உலகில் நல்லறம் ஆற்றினை யாயின்

நிலவுவை மாதோ நீள்புக ழானே .

# அவையடக்கம்

418. அவையடக் கியலே அரில்தபத் தெரியின்

வல்லா கூறினும் வகுத்தனர் கொண்மினென்

றெல்லா மாந்தர்க்கும் வழிமொழிந் தன்றே (109)

# அவையடக்கம்

அவையடக்கியலாவது யாதென ஆராயின் , நான் எளியன சொன்னாலும் பகுத்துணர்ந்து ஏற்பன கொள்ளுங்கள் என அவையிலுள்ள எல்லார்க்கும் அடங்கிக் கூறுவதாம். தமிழ் நூல்களில் வரும் அவையடக்கப் பாடல்கள் உதாரணங்களாம் .

# செவியறிவுறூஉ

419. செவியுறை தானே,

பொங்குத லின்றிப் புரையோர் நாப்பண்

அவிதல் கடனெனச் செவியுறுத் தன்றே . (110)

# செவியறிவுறூஉ

செவியுறை என்பது, மேலோரிடத்துத் தற்பெருமை கொள்ளுதலின்றி அவர்க்கு அடங்கி நடத்தலே கடப்பாடு எனச் செவியில் அறிவுறுத்துவது.

"தந்தைதாய் தன்னையர் தீகுமறி புல்வோர்

முந்திய வயதினர் ஊருயர் மக்கள்

வந்தவர்ப் பணிந்துநின் வரம்புகட வாமல்

இந்த வுலகில் நிகழ்தல் நின் கடனே ."

# நேரடிக்குரிய பாக்கள்

420. ஒத்தாழிசையும் மண்டில யாப்புங்

குட்டமும் நேரடிக் கொட்டின வென்ப . (111)

# நேரடிக்குரிய பாக்கள்

ஒத்தாழிசையும், மண்டில யாப்பும் குட்டமும் நேரடிக்குப் பொருந்தின. நேரடி என்பது நேரடியான் வரும் கலி, வெண்பா, ஆசிரியம் எனும் பாக்களை யுணர்த்தும் . எனவே அப்பாக்களில் ஒத்தாழிசை, மண்டில யாப்பு, குட்டம் என்பவை வரும் என்றவாறாம். ஒத்தாழிசை ஒருபொருள்மேல் மூன்றடுக்கிவரும் தாழிசை யாதலின் , அது கலிப்பாவில் வரும். மண்டிலயாப்பு ஆசிரியப்பாவில் நிலைமண்டில ஆசிரியப்பா எனப்பட்டு வரும். வெண்பாவில் ஈற்றடி முச்சீராய் வாராமல் நாற்சீராய் வந்து நிலைமண்டில் வெண்பா எனப்படும். குட்டம் என்பது குறைவு

# நேரடிக்குரிய பாக்கள்

குறைந்த சீர்கள் இணைக்குறளாசிரியப்பாவில்

1. “ அட்டாலும் பால்சுவையிற் குன்றா தளவளாய்

நட்டாலும் நண்பல்லார் நண்பல்லர்

கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்க ளேசங்கு சுட்டாலும் வெண்மை தரும். இதில் இரண்டாம் அடி குட்டம். வரும். நேரடி போலவே குறளடியும் சிந்தடியும் அடி எனப்படும். வெண்பாவிலும் இறுதியடியேயன்றி இடையடியும் குட்டமாக வரும் அட்டாலும் பால்கவையில்” என்னும் பாடலில் இரண்டாமடி முச்சீரது காண்க. கலிப்பாவில் சின்னவுறுப்பு இருசீரடியானும் முச்சீரடியானும் வரும் . வெண்பாவின் இறுதியடியும் ஆசிரியப்பாவின் ஈற்றயலடியும் முச்சீரான் வருவது இங்குக் காட்டப்படவேண்டா, ஆசிரியர் முன்னர் விதந்தமையின்

# நேரடிக்குரிய பாக்கள்

குறைந்த சீர்கள் இணைக்குறளாசிரியப்பாவில்

1. “ அட்டாலும் பால்சுவையிற் குன்றா தளவளாய்

நட்டாலும் நண்பல்லார் நண்பல்லர்

கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்க ளேசங்கு சுட்டாலும் வெண்மை தரும். இதில் இரண்டாம் அடி குட்டம். வரும். நேரடி போலவே குறளடியும் சிந்தடியும் அடி எனப்படும். வெண்பாவிலும் இறுதியடியேயன்றி இடையடியும் குட்டமாக வரும் அட்டாலும் பால்கவையில்” என்னும் பாடலில் இரண்டாமடி முச்சீரது காண்க. கலிப்பாவில் சின்னவுறுப்பு இருசீரடியானும் முச்சீரடியானும் வரும் . வெண்பாவின் இறுதியடியும் ஆசிரியப்பாவின் ஈற்றயலடியும் முச்சீரான் வருவது இங்குக் காட்டப்படவேண்டா, ஆசிரியர் முன்னர் விதந்தமையின்

# புறனடை

421. குட்டம் எருத்தடி உடைத்தும் ஆகும் (112)

# புறனடை

சீர்குறைந்த அடியாகிய குட்டம் தரவின் ஈற்றடியிலும் வரும். எருத்தம் என்பது கலிப்பாவின் தரவாம் . உதாரணம் முல்லைக்கலி மூன்றாம், நான்காம் பாடல்களிற் காண்க.

# இரண்டும்...

422. மண்டிலங் குட்டம் என்றிவை இரண்டும்

செந்தூக் கியல என்மனார் புலவர். (113)

# இரண்டும்...

மண்டிலம் குட்டம் என்னும் இரண்டும் ஆசிரியப்பாவில் பயில நடக்கும் என்பர்.

வெண்பாவில் சிறுபான்மை வரும்.

## வெண்பாவால் வருவன

423. நெடுவெண் பாட்டே குறுவெண் பாட்டே

கைக்கிளை பரிபாட் டங்கதச் செய்யுளோ

டொத்தவை எல்லாம் வெண்பா யாப்பின. (114)

# வெண்பாவால் வருவன

நான்கடியின் மிக்க வடிகளான்வரும் நெடுவெண்பாட்டும் நான்கடியின் இழிந்த அடிகளான்வரும் குறுவெண்பாட்டும் கைக்கிளைப் பொருள்மேல் வரும் பாட்டும் , பரிபாடற் செய்யுளும் , அங்கதச் செய்யுளும் ஆகியவை வெண்பா யாப்பாற் செய்யப்படுவன.

# வெண்பாவால் வருவன

நெடுவெண்பாட்டு - பஃறொடைவெண்பா, கலிவெண்பா குறுவெண்பாட்டு- குறள் வெண்பா, சிந்தியல் வெண்பா கைக்கிளைப்பாட்டு - இயற்கைப்புணர்ச்சியின் முன்னர் நிகழும் காட்சி பற்றியதும் சுட்டிப் பெயர்கொள்ளும் முத்தொள்ளாயிர முதலியவற்றில் வரும் புறப்புறம்பற்றியதுமாய கைக்கிளைகள்.

பரிபாடல் - இது பலபாவும் கலந்துவருவதில் வரும் வெண்பாவைக் குறிக்கும்.

அங்கதம் - வசை இதுவும் வெண்பாவால் வரும்.

# கைக்கிளைப்பாட்டு முடியுமாறு

24. கைக்கிளை தானே வெண்பா வாகி

ஆசிரிய இயலான் முடியவும் பெறுமே. (115)

# கைக்கிளைப்பாட்டு முடியுமாறு

கைக்கிளைதான் முன்பு வெண்பாவடிகள் வந்து பின்பு ஆசிரியவடி வந்து முடியவும் பெறும். இது மருட்பாவாகும். எனவே, கைக்கிளை வெண்பா என்பது, முன்குறித்தபடி வெண்பாவாக வருவதும், இக்குறித்தபடி மருட்பாவாக வருவதும் என இருவகைப்படும்.

# பரிபாடல்

425. பரிபா டல்லே தொகைநிலை வகையின்

இதுபா என்னும் இயனெறி இன்றிப்

பொதுவாய் நிற்றற்கும் உரித்தென மொழிப. (116)

# பரிபாடல்

பரிபாடலாவது, இவ்வளவு என்னும் தொகைகொடுத்து ஓதும் இன்ன பா என்னும் இலக்கண நெறியின்றி நால்வகைப் பாவிலும் வருவதற்கும் உரியது என்பர். உம்மையால் இலக்கணம் கூறவும்படும் என்றவாறு

# பரிபாடல் உறுப்பு

426. கொச்சகம் அராகஞ் சுரிதகம் எருத்தொடு

செப்பிய நான்கும் தனக்குறுப் பாகக்

காமங் கண்ணிய நிலைமைத் தாகும் . (117)

# பரிபாடல் உறுப்பு

தரவொடு கொச்சகம் , அராகம் , சுரிதகம் என்று சொல்லப்பட்ட நான்கு கலி புறுப்புகளும் தனக்கு உறுப்பாகக் கொண்டு காமப்பொருளைக் கருதிவரும் நிலைமையை யுடையது அப் பரிபாடல். எனவே, பரிபாடலின் பொருள் காமப்பொருளே பிறிதில்லை என்றவாறு கொச்சகம் என்பது மகளிர் உடுக்கும் ஆடையின் கொய்சகம் போல் அடுக்கப்படு( மடிக்கப்படு ) தலின் ஒப்பினான் ஆய பெயர். அராகம் என்பது , அராவப்பட்ட பொன்போல் பாடலில் சீரடியும் பலவடியும் வந்து குற்றெழுத்து நெருங்கிவரத் தொடுப்பது .

# பரிபாடல் உறுப்பு

இதுவும் ஒப்புப் பெயர் . சுரிதகம் - பாட்டின் பொருளைச் சுரித்து முடிப்பது . எருத்து - தரவு  தரவு - பாவின் முன்னர்த் தரப்படுவது. கொச்சகவுறுப்புப் பரிபாடலில் பயின்று வருதலின் முன்வைக்கப்பட்டது. அராகம் முதற்கண் வாராமல் இடைக்கண் வருதலின் அதன்பின் வைக்கப்பட்டது. சுரிதகம் ஈற்றிலேயே வருதலின் அதன்பின் வைக்கப்பட்டது . தரவு (எருத்தம்) இல்லாமலும் பரிபாடல் வருமாதலின் அதன் இழிவுகருதி யிறுதியில் வைக்கப்பட்டது .

# பரிபாடலடிகள்

427. சொற்சீ ரடியும் முடுகிய லடியும்

அப்பா நிலைமைக் குரிய வாகும். (118)

# பரிபாடலடிகள்

சொற்சீரடியும், முடுகியலடியும், பரிபாடற்கு உள்ளே வரும் உறுப்பாய் நிற்றற்குரிய வாகிவரும். சொற்சீரடியாவது, வரும் சூத்திரத்தாற் கூறப்படுவது. முடுகியலடியாவது ஐந்தடி, ஆறடி, ஏழடிகளால் குற்றெழுத்து மிக வருவது.

# சொற்சீரடியாமாறு

428. கட்டுரை வகையான் எண்ணொடு புணர்ந்து

முற்றடி யின்றிக் குறைவுசீர்த் தாகியும்

ஒழியசை யாகியும் வழியசை புணர்ந்துஞ்

சொற்சீர்த் திறுதல் சொற்சீர்க் கியல்பே. (119)

# சொற்சீரடியாமாறு

ஐந்துவகையாகச் சொல் ஒன்றே சீராம் தன்மை பெற்று அடியாக நிற்பது சொற்சீர்க்கு இயல்பு. நால்வகையாவன: கட்டுரைவகையான் வருவது - அதாவது ஒரு சொல்லே சீர்நிலைப்பட்டு அடியாக வரும்போது பாடல்போல் இல்லாமல் உலகவழக்கு உரைநடைபோல் அமைவது ,

( உ - ம் ) " வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத்

தமிழ்கூறும் நல்லுலகம் ”

# சொற்சீரடியாமாறு

எண்ணொடு புணர்தலாவது , உலகவழக்குப்போல் தொகை கொடுத்துக் கூறுதல்,

( உ - ம் ) " அஇஉ

எஒ என்னும் அப்பால் ஐந்தும் ”

இதில் அ , இ உ என்பது ஒரு சீராய்த் தனி அடியாக வந்து முடிவில் தொகையும் வந்தது .

# சொற்சீரடியாமாறு

இவ்விரண்டையும் சேர்த்து ஓர் இலக்கணமாக்குவர் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் . முட்டடியின்றிக் குறைவு சீர்த்தாதல் - நாற்சீரடியென முடியாமல் நின்னொக்கும் புகழ்நிலவை " ( பரிபா .1 : 55 ) என்பதுபோலச் சீர்குறைந்த நிலையில் அடியாக வருவது . ஒழியசை யாதலாவது தானொரு சொல்லாயிருந்து அசையாகவும் அமைந்து தன்னொடு பிறிதொரு அசைசேராது ஒழிந்து நிற்பது . ( உ - ம் ) " ஒரூஉக் கொடியியல் நல்லார் குரல்நாற்றத் துற்ற " (கலி .88 ) இதில் ' ஒரூஉ என்பது ஓரசை அளபெடை அசைநிலை பெறவில்லை; ஓரடி போலவும் தனித்து நின்றது . வழியசை புணர்தலாவது , பாடலின் பொருள் தொடர்பின் இடையே ஆங்கு என்பதுபோல் வரும் அசைநிலை வருவது . பரிபாடலிலும் கலிப்பாடலிலும் , இடையிடை வரும் ஆங்கு என்பது வழியசை . ஒரு கருத்துப் பொருள்வழி வருதலின் வழியசையாயிற்று. சொல் சீரளவில் நின்றால் சொற்சீர் என்றும் , அதுவே அடியாக எண்ணப்படின் சொற்சீரடி என்றும் பெயர்பெறும்.

# அங்கதச் செய்யுள்வகை

429. அங்கதந் தானே அரில்தபத் தெரியிற்

செம்பொருள் கரந்த தெனவிரு வகைத்தே. (120)

# அங்கதச் செய்யுள்வகை

அங்கத (வசை)ச் செய்யுளானது செம்பொருளங்கதம், பழிகரப்பங்கதம் என இருவகைத்து.

# வசை அங்கதம்

430. செம்பொரு ளாயின வசையெனப் படுமே (121)

# மறை அங்கதம்

மறையாது வெளிப்படையாகக் கூறும் வசை செம்பொருள்

அங்கதம் எனப்படும்.

( உ - ம் ) “ இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து

கெடுக வுலகியற்றி யான்

# மறை அங்கதம்

431. மொழிகரந்து மொழியின் அது பழிகரப் பாகும். (122)

# மறை அங்கதம்

புலவன் தான் வசையாகக் கூறக் கருதிய பொருளைச் சொற்களில் மறைத்துக் கூறுவது பழிகரப்பாகும்.

( உ - ம் ) " மக்களே போல்வர் கயவர் அவரன்ன

ஒப்பாரி யாங்கண்ட தில் . ”

( குறள் 1071 )

# மேலும் இரண்டுவகை

432. செய்யுள் தாமே இரண்டென மொழிப. (123)

# மேலும் இரண்டுவகை

மேற்கூறிய செம்பொருள் பழிகரப்புச் செய்யுள்கள் தாம்

மேலும் இரண்டு வகைப்படும் என்பர்.

# செவியுறை அங்கதம்

433. புகழொடும் பொருளொடும் புணர்ந்தன் றாயின்

செவியுறைச் செய்யுள் என்மனார் புலவர். (124)

# செவியுறை அங்கதம்

மேற்சொல்லிய செம்பொருளங்கதமும் பழிகரப்பங்கதமும் அரசர்க்கு அவர்தம் குற்றங்களை எடுத்துக் கூறுதல், அவர்க்குப் பொருள் பெருகக் கூறுதல் என்னும் இருவகையான செவியுறை கூறும் செய்யுளாகவும் வரும் என்பர் புலவர். எனவே , செம்பொருள் அங்கதம் வாளா செம்பொருளங்கதமும், செம்பொருட் செவியுறை அங்கதமும் என இருவகைப்படும் என்பதும், பழிகரப்பங்கதமும், வாளா பழிகரப்பங்கதமும் பழிகரப்புச் செவியுறை அங்கதமும் என இருவகைப்படும் என்பதும் கூறப்பட்டதாம்.

# புறனடை

434. வசையொடும் நசையொடும் புணர்ந்தன் றாயின்

அங்கதச் செய்யுள் என்மனார் புலவர். (125)

# புறனடை

வசைப்பொருளொடும் அதன் பயனாகிய நசைப் பொருளொடும் ஒரு செய்யுள்வரின் அது செம்பொருளங் கதம் பழிகரப்பங்கதம் எனப்படும் என்பர் புலவர். இது வசையும் வாழ்த்தும் சேர்ந்துகூட இருவகை அங்கதம் வரப்பெறும் என்பது . வசையே வரவேண்டும் என்பதில்லை.

# கலிப்பாவகை

435. ஒத்தா ழிசைக்கலி கலிவெண் பாட்டே

கொச்சகம் உறழொடு கலிநால் வகைத்தே. (126)

# கலிப்பாவகை

கலிப்பா - ஒத்தாழிசைக் கலியும், கலிவெண்பாட்டும், கொச்சகமும், உறழ்கலியும் என நான்கு வகைப்படும்.

# ஒத்தாழிசைக் கலிவகை

436. அவற்றுள் ஒத்தாழிசைக்கலி இருவகைத் தாகும். (127)

# ஒத்தாழிசைக் கலிவகை

கலிப்பா நான்கனுள் ஒத்தாழிசைக் கலிப்பா இருவகைத் தாகும்

# ஒத்தாழிசைக்கலி

437. இடைநிலைப் பாட்டே தரவுபோக் கடையென

நடைநவின் றொழுகும் ஒன்றென மொழிப. (128)

# ஒத்தாழிசைக்கலி

தாழிசை, தரவு, சுரிதகம், தனிச்சொல் எனும் நான்கினாலும்

நடைபெறும் ஒருவகை ஒத்தாழிசைக் கலி.

# தரவின் அடிவரையறை

438. தரவே தானும் நாலடி யிழிபாய்

ஆறிரண் டுயர்வும் பிறவும் பெறுமே. (129)

# தரவின் அடிவரையறை

தரவு என்னும் உறுப்பானது நான்கடி இழிபாகப் பன்னிரண்டடி உயர்பாக இடைப்படும் அடிகளானும் வரப்பெறும்.

# தாழிசை அடிவரையறை

439. இடைநிலைப் பாட்டே

தரவகப் பட்ட மரபின் என்ப. (120)

# தாழிசை அடிவரையறை

தாழிசையுறுப்பானது தரவினின் குறைந்து வரும் மரபுடையது என்பர். தரவு நான்கடியாயின் தாழிசை மூன்றடியும் இரண்டடியுமாயும், தரவு ஆறடியாயின் தாழிசை நான்கடியாயும் குறைவாயும் வரும். தாழிசை நான்கடியின் மிகுதல் இல்லை.

# மறை அங்கதம்

431. மொழிகரந்து மொழியின் அது பழிகரப் பாகும். (122)

# மறை அங்கதம்

புலவன் தான் வசையாகக் கூறக் கருதிய பொருளைச் சொற்களில் மறைத்துக் கூறுவது பழிகரப்பாகும்.

(உ - ம்) மக்களே போல்வர் கயவர் அவரன்ன

ஒப்பாரி யாங்கண்ட தில் (குறள் 1071)

# மேலும் இரண்டுவகை

செய்யுள் தாமே இரண்டென மொழிப. (123)

# மேலும் இரண்டுவகை

மேற்கூறிய செம்பொருள் பழிகரப்புச் செய்யுள்கள் தாம் மேலும் இரண்டு வகைப்படும் என்பர்

# செவியுறை அங்கதம்

433. புகழொடும் பொருளொடும் புணர்ந்தன் றாயின்

செவியுறைச் செய்யுள் என்மனார் புலவர். (124)

# செவியுறை அங்கதம்

மேற்சொல்லிய செம்பொருளங்கதமும் பழிகரப்பங்கதமும் அரசர்க்கு அவர்தம் குற்றங்களை எடுத்துக் கூறுதல் , அவர்க்குப் பொருள் பெருகக் கூறுதல் என்னும் இருவகையான செவியுறை கூறும் செய்யுளாகவும் வரும் என்பர் புலவர். எனவே , செம்பொருள் அங்கதம் வாளா செம்பொருளங்கதமும், செம்பொருட் செவியுறை அங்கதமும் என இருவகைப்படும் என்பதும், பழிகரப்பங்கதமும் , வாளா பழிகரப்பங்கதமும் பழிகரப்புச் செவியுறை அங்கதமும் என இருவகைப்படும் என்பதும் கூறப்பட்டதாம்.

# புறனடை

434. வசையொடும் நசையொடும் புணர்ந்தன் றாயின்

அங்கதச் செய்யுள் என்மனார் புலவர். (125)

# புறனடை

வசைப்பொருளொடும் அதன் பயனாகிய நசைப்பொருளொடும் ஒரு செய்யுள்வரின் அது செம்பொருளங்கதம் பழிகரப்பங்கதம் எனப்படும் என்பர் புலவர். இது வசையும் வாழ்த்தும் சேர்ந்துகூட இருவகை அங்கதம் வரப்பெறும் என்பது . வசையே வரவேண்டும் என்பதில்லை

# கலிப்பாவகை

435. ஒத்தா ழிசைக்கலி கலிவெண் பாட்டே

கொச்சகம் உறழொடு கலிநால் வகைத்தே. (126)

# கலிப்பா வகை

ஒத்தாழிசைக் கலியும், கலிவெண்பாட்டும், கொச்சகமும், உறழ்கலியும் என நான்கு வகைப்படும் கலிப்பா.

# ஒத்தாழிசைக் கலிவகை

436. அவற்றுள்

ஒத்தாழிசைக்கலி இருவகைத் தாகும். (127)

# ஒத்தாழிசைக் கலிவகை

கலிப்பா நான்கனுள் ஒத்தாழிசைக் கலிப்பா இருவகைத் தாகும்.

# ஒத்தாழிசைக்கலி

437. இடைநிலைப் பாட்டே தரவுபோக் கடையென

நடைநவின் றொழுகும் ஒன்றென மொழிப . (128)

# ஒத்தாழிசைக்கலி

தாழிசை, தரவு, சுரிதகம், தனிச்சொல் எனும் நான்கினாலும் நடைபெறும் ஒருவகை ஒத்தாழிசைக் கலி.

# தரவின் அடிவரையறை

438. தரவே தானும் நாலடி யிழிபாய்

ஆறிரண் டுயர்வும் பிறவும் பெறுமே . (129)

# தரவின் அடிவரையறை

தரவு என்னும் உறுப்பானது நான்கடி இழிபாகப் பன்னிரண்டடி உயர்பாக இடைப்படும் அடிகளானும் வரப்பெறும்.

# தாழிசை அடிவரையறை

439. இடைநிலைப் பாட்டே

தரவகப் பட்ட மரபின் என்ப. (120)

# தாழிசை அடிவரையறை

தாழிசையுறுப்பானது தரவினின் குறைந்து வரும் மரபுடையது என்பர். தரவு நான்கடியாயின் தாழிசை மூன்றடியும் இரண்டடியு மாயும், தரவு ஆறடியாயின் தாழிசை நான்கடியாயும் குறைவாயும் வரும். தாழிசை நான்கடியின் மிகுதல் இல்லை.

# தனிச்சொல் வருமிடம்

440. அடைநிலைக் கிளவி தாழிசைப் பின்னர்

நடைநவின் றொழுகும் ஆங்கென மொழிப. (131)

# தனிச்சொல் வருமிடம்

தனிச்சொல்லானது தாழிசைப் பின்னர் வரும் என்பர். சிறுபான்மை முன்னரும் வரும். 1. நடைநவின் றொழுகுதலாவது செய்யுட்கண் பயின்று வருதல் நடை செய்யுள். போக்கு எனக் கொண்டு செய்யுட்கண் ஆளும் போக்கு எனினும் ஆம். 2. ஆங்கு என்பது 7 ஆம் வேற்றுமை யிடப்பொருள் தருவதோர் இடைச்சொல் ஆதலின் எல்லாச் செய்யுளிலும் ஆங்கு என்பதைக் கூறும்போது அச் சொல்லின் பொருளுக்கேற்ப முன்னர்க் கூறப்படும் பொருள் அமைதல் வேண்டும் என்பர் சிலர்.

# தனிச்சொல் வருமிடம்

அது தேவையில்லை. பொருளில்லா அசைச் சொல்லாகவே அதனைக் கூறலாம். அப்படி அமைப்பது மரபு ஆதலின் சிலர் கூறுவது போலக் கொள்வதாயின் நடைநவின்று வரும் என்ற மிகையால் ஆங்கு என்பதேயன்றிப் பிற சொற்களும் சிறுபான்மை வரும் என்ற கருத்துப் பெறப்படாது. நடைநவிலும் என்ற மிகையால் பிறவும் தனிச்சொல்லாக வரும் எனும் கருத்துப் பயந்தது என்க. அவை பொருளுடையனவாக வரும்.

# சுரிதகவியல்

தரவியல் ஒத்தும் அதனகப் படுமே

புரைதீர் இறுதி நிலையுரைத் தன்றே. (132)

# சுரிதகவியல்

சுரிதகம் (போக்கியல்) வைப்பு எனவும் கூறப்படும். அது தரவு எத்துணையடி வந்ததோ அத்துணை யடியுடையதாய் அடியால் ஒத்தும் தரவிற் குறைந்த அடியுடையதாயும் குற்றம் தீர்ந்த செய்யுளின் இறுதியில் உரைக்கப்படுவது. சுரிதகத்துக்கும் பெருமை தரவுபோல நான்கடி முதல் பன்னிரண்டடியும், சிறுமை இரண்டடியும் மூன்றடியும் கொள்க.

# ஒத்தாழிசைக்கலிப் பொருள்

442. ஏனை யொன்றே,

தேவர்ப் பராஅய முன்னிலைக் கண்ணே. (133)

# ஒத்தாழிசைக்கலிப் பொருள்

சொல்லாது விடுபட்ட ஒத்தாழிசைக் கலிப்பாவானது தேவரை முன்னிலைப்படுத்திப் பரவுமிடத்தது.

# தேவர்ப் பரவும் ஒத்தாழிசைவகை

443. அதுவே,

வண்ணகம் ஒருபோ கெனவிரு வகைத்தே. (134)

# தேவர்ப் பரவும் ஒத்தாழிசைவகை

மேற்சொல்லப்பட்ட முன்னிலைப்பரவலாகிய ஒத்தாழிசைக் கலி வண்ணகம் எனவும் ஒருபோகு எனவும் இருவகைப்படும்.

# வண்ணக ஒத்தாழிசைக்கலி

444. வண்ணகம் தானே,

தரவே தாழிசை எண்ணே வாரமென்

றந்நால் வகையில் தோன்று மென்ப. (135)

# வண்ணக ஒத்தாழிசைக்கலி

வண்ணக ஒத்தாழிசையானது தரவும், தாழிசையும், எண்ணும், சுரிதகமும் எனும் நான்கு உறுப்பினையுடையது. 1. அம்பு - நீர், தரங்கம் - அலை. 2. வண்ணகம் என்பது அராகம் எனக் கொண்டு வண்ணித்துவரின் அதனை அராகம் எனும் உறுப்பு என்றனர் பிற்காலத்தார். தாழிசையால் தெய்வத்தை வண்ணித்துப் பாடலின் வண்ணகம் ஆயிற்று. பிற்காலத்தார் அம்போதரங்க உறுப்பு ஒன்று கொண்டு அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பாவும் கொள்வர்.

# வண்ணகவொத்தாழிசைக் கலித்தரவின் அடிவரையறை

445. தரவே தானும்,

நான்கும் ஆறும் எட்டும் என்ற

நேரடி பற்றிய நிலைமைத் தாகும். (136)

# வண்ணகவொத்தாழிசைக் கலித்தரவின் அடிவரையறை

வண்ணக வொத்தாழிசைக் கலிப்பாவுக்குத் தரவானது நான்கு, ஆறு, எட்டு எனும் அளவடியினாலேயே வரும் நிலையது.

1. நான்கடி தலையளவு, ஆறடி இடையளவு, எட்டடி கடையளவு
2. வியநிலை - சமநிலைக்கு மாறுபட்ட நிலை.
3. அளவடியால்தான் வருதல் என்பதில்லை.

# தாழிசை அளவு

446. ஒத்துமூன் றாகும் ஒத்தாழிசையே

தரவிற் சுருங்கித் தோன்று மென்ப. (137)

# தாழிசை அளவு

பொருளானும், அடியளவானும் ஒத்து மூன்றாகி வரும் தாழிசை, அது தரவடியிற் சுருங்கிய அடியாய் வரும் என்பர்.

# சுரிதக நிலை

447. அடக்கியல் வாரம் தரவோ டொக்கும் . (138)

# சுரிதக நிலை

அடக்கியலாகிய சுரிதகம் (வாரம்) தரவோடொத்த இலக்கணத்தது. (செய்யுளில்) முன்னர்ப் பலவகையாற் புகழப்பட்ட தெய்வத்தினை ஒரு பெயர் கொடுத்து அடக்கிநிற்றலின் அடக்கியல் என்றான்.

# எண்

448. முதற்றொடை பெருகிச் சுருங்குமன் எண்ணே. (139)

# எண்

எண்ணுறுப்பானது முன்னர்த் தொடுக்கப்பட்ட உறுப்புப் பெருகிவரப் பிற்பிற் றொடுக்கப்படும் உறுப்புகள் குறைந்து வரும். இரண்டடியான் வருவன இரண்டும், ஓரடியான் வருவன நான்கும், சிந்தடியான் வருவன எட்டும், குறளடியான் வருவன பதினாறும் ஆகச் சுருங்கிவரும் எண் என்பது பிற்காலத்தார் வரையறை. ஆசிரியர் கூறாமையின் வேண்டியவாறு அவர் காலத்து வரப்பெறும் போலும்.

# எண் – புறனடை

449. எண்ணிடை ஒழிதல் ஏதம் இன்றே

சின்னம் அல்லாக் காலை யான. (140)

# எண் – புறனடை

பேரெண், அளவெண், இடையெண், சிற்றெண் என்னும் எண்களுள் ஒன்றிரண்டு குறையினும் அவற்றிடையே தனிச்சொல் இன்றி வரின் குற்றம் இல்லை. சின்னம் என்பது தனிச்சொல். இது இளம்பூரணர் உரை.

# ஒருபோகின் வகை

450. ஒருபோ கியற்கையும் இருவகைத் தாகும். (141)

# ஒருபோகின் வகை

ஒருபோகு ஒத்தாழிசை இரண்டு வகைப்படும். வண்ணக வொத்தாழிசை விவரம் இதுவரை கூறப்பட்டு இதுமுதல் ஒருபோகு ஒத்தாழிசை கூறப்படும்.

# நாடி உணர்தல்

451. கொச்சக ஒருபோ கம்போ தரங்கமென்

றொப்ப நாடி உணர்தல் வேண்டும். (142)

# நாடி உணர்தல்

ஒருபோகின் வகையாகிய கொச்சக ஒருபோகினையும் அம்போதரங்க ஒரு போகினையும் பொருந்த ஆய்ந்து அறிதல் வேண்டும். 1. வண்ணகம் ஒருபோகு என்றவிடத்தில் இரண்டற்கும் கொச்சகம் உண்டு என்பதுபட நின்றது . அது ஒருவழி வாராத பாடல் ஒருபோகு எனப்படும்.

# நாடி உணர்தல்

அதாவது கொச்சக ஒருபோகு எனப்படும். கொச்சக ஒருபோகு என்பது கொச்சகம் ஒருவழிப் போதல் (இல்லையாதல்) எனப் பொருள்படும். அது கொச்சகம் ஒருவழிப் போதலையுடைய பாடலை யுணர்த்தலின் அன்மொழியாம். 2 இடையீடில்லா நிலம் - பிறரது இடையில்லாத ஒருவர்க்கேயுரிய பரந்த நிலம். 3. திரிகோட்ட வேணி பாடம் விளங்கவில்லை.

# கொச்சகவொருபோகு

452. தரவின் றாகித் தாழிசை பெற்றும்

தாழிசை யின்றித் தரவுடைத் தாகியும்

எண்ணிடை யிட்டுச் சின்னங் குன்றியும்

அடக்கிய லின்றி அடிநிமிர்ந் தொழுகியும்

யாப்பினும் பொருளினும் வேற்றுமை யுடையது

கொச்சக வொருபோ காகும் என்ப (143)

# கொச்சகவொருபோகு

கொச்சகக ஒருபோகுவகை வருமாறு: ஒத்தாழிசைக் கலிப்பாவுக்குரிய உறுப்புகளுள் தரவில்லாமல் தாழிசை முதலிய வுறுப்புகள் பெற்று வருவதும், தாழிசையில்லாமல் தரவு முதலிய வுறுப்புகள் பெற்றுவருவதும், எண்கள் இடைவந்து தனிச்சொல் இல்லாமல் வருவதும், சுரிதகம் இல்லாமல் மற்றை யுறுப்புகளுடன் அடிநிமிர்ந்து வருவதும். ஒத்தாழிசைக் கோதப்பட்ட யாப்பின் வேறுபடப் பலவாறு வருவதும், ஒத்தாழிசைக்குரிய கடவுள் வாழ்த்துப் பொருண்மையின்றிக் காமப் பொருளில் வருவதும் என்னும் இவ்வேறுபாடுகளுடன் கொச்சக ஒருபோகு வரும்.

# அளவு

453. ஒருபான் சிறுமை இரட்டி அதன் உயர்பே. 144

# அளவு

கொச்சக ஒருபோகுச் செய்யுளின் அடிவரையறை குறைந்த அளவு பத்தடியாகும். மிகுதியான அளவு இருபதடியாகும்.

# அம்போதரங்கவொரு போகு அடிவரையறை

454. அம்போத ரங்கம் அறுபதிற் றடித்தே

செம்பால் வாரஞ் சிறுமைக் கெல்லை. (145)

# அம்போதரங்கவொரு போகு அடிவரையறை

அம்போதரங்க ஒருபோகு உயர் எல்லையாக அறுபது அடியுடையதாம். சிற்றெல்லை அதன் பாதியாகிய முப்பதடியாம்.

# அம்போதரங்க வறுப்பு

455. எருத்தே கொச்சகம் அராகஞ் சிற்றெண்

அடக்கியல் வாரமொ டந்நிலைக் குரித்தே. (146)

# அம்போதரங்க வறுப்பு

தரவும், கொச்சகமும், அராகமும், சிற்றெண்ணும், சுரிதகமும் எனும் ஐந்துறுப்பும் அம்போதரங்க ஒருபோகுக்குரித்து. இதில் தனிச்சொல்லும் கொள்க. கொச்சகம் என்றது கொச்சக ஒருபோகின் வகைகளுள் ஏதேனும் ஒன்று. சுரிதகத்து முன் தனிச்சொல் வரும். முறை கூறியவாறே கொள்க.

# கலிவெண்பா

456. ஒருபொருள் நுதலிய வெள்ளடி இயலால்

திரிபின்றி முடிவது கலிவெண் பாட்டே. (147)

# கலிவெண்பா

இலக்கணத்தோடு திரிவின்றி முடிவது கலிவெண்பாட்டாம். கலிவெண்பா ஒருபொருளை நுதலி வரும் என்பதும், ஒருபொருளே நுதலிவரினும் அடிபல நிமிர்ந்து வருதலின் இடையிடையே பல பொருளும் விரவிவரும் என்பதும், வெண்பாச்சீரும் தளையும் கொண்டே வரும் என்பதும் , இறுதியடி முச்சீராம் என்பதும் அறிக. தளை சீர்களால் மாறுபடின் ஈற்றடி முச்சீராய் அமையின் கலியோசை கொண்டதாயின் வெண்கலிப்பா என்க .

# கொச்சகக்கலி

457. தரவும் போக்கும் இடையிடை மிடைந்தும்

ஐஞ்சீர் அடுக்கியும் ஆறுமெய் பெற்றும்

வெண்பா இயலான் வெளிப்படத் தோன்றும்

பாநிலை வகையே கொச்சகக் கலியென

நூல்நவில் புலவர் நுவன்றறைந் தனரே (148)

# கொச்சகக்கலி

பாநிலை வகையுள் கொச்சகக்கலி என்பது தரவும் சுரிதகமும் முறையாக இன்றி யிடையிடையே கலந்தும் யாதேனும் ஓரிடத்துப் பொருத்தமாக ஐந்து சீரடி வந்தும், தரவு, தாழிசை, தனிச்சொல், சுரிதகம், சொற்சீரடி, முடுகியலடி எனும் ஆறு உறுப்புகள் பெற்றும் வரும் என்று நூல் பயில் புலவர் கூறினர். இது, கொச்சகக்கலியின் பொதுவிலக்கணம்.

( உ - ம் ) “காமர் கடும்புனல் (கலி.36)

# உறழ்கலி

458. கூற்றும் மாற்றமும் இடையிடை மிடைந்தும்

போக்கின் றாகல் உறழ்கலிக் கியல்பே. (149)

# உறழ்கலி

உறழ்கலிக்கு இயல்பாவது, ஒருவர் ஒன்று கூறலும் அதற்கு மற்றொருவர் மறுமாற்றம் கூறுதலும் ஆகிய உறழ்ச்சிகள் பாவின் இடையிடையே கலந்து வருவதாம். இது எல்லா வுறுப்பானும் வருதலும், சில குறைந்துவருதலும், ஒருகால் சுரிதகம் இல்லாது வருதலும் எனப் பலவாறு வரப்பெறும். உறழ்தல் தலைவன், தலைவி, தோழியரிடையே வரும். கலித்தொகையில் உதாரணம் காண்க.

# 12. அடியளவு ஆசிரியப்பாவடி

459. ஆசிரியப் பாட்டின் அளவிற் கெல்லை

ஆயிர மாகும் இழிபுமூன் றடியே. (150)

# 12. அடியளவு ஆசிரியப்பாவடி

ஆசிரியப்பாவுக்குப் பேரெல்லை ஆயிரமடி , சிற்றெல்லை மூன்றடி.

# வெண்பா அடிவரையறை

460. நெடுவெண் பாட்டே முந்நான் கடித்தே

குறுவெண் பாட்டிற் களவேழ் சீரே. (151)

# வெண்பா அடிவரையறை

நெடுவெண்பாட்டுக்குப் பேரெல்லை பன்னிரண்டடி;

குறுவெண்பாட்டுக்குச் சிற்றெண் எழுசீரமைந்த இரண்டடி.

# வெண்பா அடிவரையறை

461. அங்கதப் பாட்டள வவற்றோ டொக்கும். (152)

# வெண்பா அடிவரையறை

அங்கதப்பாட்டிற்கும் (வெண்பாயாப்பில் வருவது) பேரெல்லை பன்னிரண்டடி; சிற்றெல்லை ஈரடி.

# அடிவரையறை யில்லாதன

462. கலிவெண் பாட்டே கைக்கிளைச் செய்யுள்

செவியறி வாயுறை புறநிலை என்றிவை

தொகைநிலை மரபின் அடியில என்ப. (153)

# அடிவரையறை யில்லாதன

கலிவெண்பா கைக்கிளைப் பொருளில் வரும். வெண்பா, செவியறிவுரைப் பாட்டு, வாயுறை வாழ்த்துப் பாட்டு, புறநிலை வாழ்த்துப் பாட்டு என்ற இவை அடிவரையறையில்லாத னவாகும்.

# மருட்பாவும் பொருளும்

463. புறநிலை வாயுறை செவியறி வுறூஉவெனத்

திறநிலை மூன்றுந் திண்ணிதில் தெரியின்

வெண்பா இயலினும் ஆசிரிய இயலினும்

பண்புற முடியும் பாவின என்ப. (154)

# மருட்பாவும் பொருளும்

புறநிலை வாழ்த்து, வாயுறை வாழ்த்து, செவியறிவுறூஉ எனும் மூன்றையும் நன்கு தெரியின், வெண்பாவும் ஆசிரியமும் கூடி முடியும் மருட்பாவில் வருவன என்பர். கைக்கிளையில் மருட்பா வருதலோடு இவற்றிலும் வரும் என்பது. எனவே, மருட்பா மேற்சொன்ன நான்கு பொருளில்தான் வரும்.

# பரிபாடல் அடிவரையறை

464. பரிபா டல்லே

நாலீ ரைம்ப துயர்படி யாக

ஐயைந் தாகும் இழிபடிக் கெல்லை. (155)

# பரிபாடல் அடிவரையறை

பரிபாடற் செய்யுள் நானூறடி உயர்பாகவும் இருபத்தைந்தடி இழிபாகவும் வரும்.

# அடிவரையறை முடிபு

465. அளவியல் வகையே அனைவகைப் படுமே. (156)

# அடிவரையறை முடிபு

பாக்களின் அடியளவின் கூறுபாடு மேலே கூறிவந்த அத்துணைப் பகுதிப்படும்.

# அடிவரையறை யில்லாதன

466. எழுநிலத் தெழுந்த செய்யுள் தெரியின்

அடிவரை யில்லன ஆறென மொழிப. (157)

# அடிவரையறை யில்லாதன

பாட்டு, உரை முதலிய எழுநிலத்தெழுந்த செய்யுள்களைத் தெரியுங்கால் அடிவரையறையில்லன பாட்டு ஒழிந்த ஆறுமாம். எழுநிலமாவன பின்வரும் சூத்திரத்துக் காண்க.

# அவைதாம்

467. அவைதாம்,

நூலி னான உரையி னான

நொடியொடு புணர்ந்த பிசியி னான

ஏது நுதலிய முதுமொழி யான

மறைமொழி கிளந்த மந்திரத் தான

கூற்றிடை வைத்த குறிப்பி னான. (158)

# அவைதாம்

நூல், உரை, பிசி, முதுமொழி, மந்திரம், குறிப்பு என்பன அவ்வறுவகையாம்.

# நூலாமாறு

468.அவற்றுள்,

நூலெனப் படுவது நுவலுங் காலை

முதலும் முடிவும் மாறுகோ ளின்றித்

தொகையினும் வகையினும் பொருண்மை காட்டி

உண்ணின் றகன்ற உரையொடு புணர்ந்து

நுண்ணிதின் விளக்கல் அதுவதன் பண்பே. (159)

# நூலாமாறு

நூல் என்று சொல்லப்படுவது, புலவன் தான் சொல்லக் கருதிய பொருள் முன்னும் பின்னும் மாறுபடாமல் அப்பொருளைத் தொகுத்தும் வகுத்தும் காட்டி, நூலினுள்ளே அடங்கியிருந்து விரிவாகச் சொல்லப்படும் உரையோடு பொருந்தி, நுண்ணிதாகப் பொருள் விளக்குமாறு அமையும் இலக்கணத்ததாகிய அவ் விலக்கணமுடையதாம். எனவே நூல் என்பது, கூறப்படும் பொருள் முன்னுக்குப் பின் மாறுபடாதது, தொகுத்தும் வகுத்தும் கூறப்படுவது, விரிவுரை நிகழ்த்துமாறு சொற்றொடர் நுண்ணியவாக அமைவது என்பதாம்.

# நூலின்வகை

469. அதுவே தானும் ஒருநால் வகைத்தே. (160)

# நூலின்வகை

அந் நூலானது நான்கு வகைத்து.

# அவையாமாறு

470. ஒருபொருள் நுதலிய சூத்திரத் தானும்

இனமொழி னேந்த ஒத்தி னானும்

பொதுமொழி கிளந்த படலத் தானும்

மூன்றுறுப் படக்கிய பிண்டத் தானுமென்று

ஆங்கனை மரபின் இயலும் என்ப . (161)

# அவையாமாறு

நூல் என்பது சூத்திரம், ஒத்து, படலம், பிண்டம் எனும் நான்கும் கொண்டது என்பதாம். மேலும் பல இனப் பொதுப்பொருள்களைக் கூறும் படலங்களினால் வருவதும், இயல், இசை, நாடகம் எனும் மூன்று உறுப்புகளையும் அடக்கி வரும் பிண்டத்தினால் வருவதும் என அம்மரபினான் நூல் இயலும் என்பர். ஒருபொருள் - கருதிய சூத்திரங்கள் மட்டும் வந்த நூல் இன்று இல்லை.

# அவையாமாறு

சூத்திரமும் இயலும் உடையது இறையனாரகப்பொருள், களவியல் கற்பியல் என இரண்டியலுடையது.

சூத்திரம், இயல் ஆகியவற்றுடன் படலமும் (அதிகாரம்) உடையது தொல்காப்பியமும் நன்னூலும் பிறவும் ஆம்.

இயலிசை நாடகவுறுப்படங்கியது அகத்தியம், இன்று இல்லை.

நூல் என்பது பெரும்பாலும் இலக்கண நூலினையே.

# சூத்திரம்

471. அவற்றுள்,

சூத்திரம் தானே

ஆடி நிழலின் அறியத் தோன்றி

நாடுதல் இன்றிப் பொருள்நனி விளங்க

யாப்பினுள் தோன்ற யாத்தமைப் பதுவே . (162)

# சூத்திரம்

அவற்றுள், சூத்திரமாவது, கண்ணாடியில் நிழல் வெளிப்படையில் தோன்றுமாறு தன்னிடம் புலவன் கருதிய பொருள் எளிதில்  புலப்படுமாறு அமைந்து, நுண்ணிதின் ஆராய்ந்தே யறிய வேண்டும் என்பதின்றி நன்றாக விளங்குமாறு செய்யுளுள் தெளிவாக அமைவது  வேயாம்.  படித்த அளவில் பொருள் விளங்கவும் அறிவான் ஆராயாமல்  புலப்படும்படியும் அமைவது சூத்திரம்.

(உ- ம்) "வேற்றுமை தாமே ஏழென மொழிப"  "விளிகொள் வதன்கண் விளியோ டெட்டே " ( தொல் வேற்றுமையியல் 1 , 2) இதில் பொருள் எளிதில் ஆராய வேண்டாமல் புலப்படுதல் காண்க.

# ஒத்து

472. நேரின மணியை நிரல்பட வைத்தாங்கு

ஓரினப் பொருளை ஒருவழி வைப்பது

ஒத்தென மொழிப உயர்மொழிப் புலவர். (163)

# ஓத்து

ஓரினமான மணிகளை மாலையில் வரிசைப்பட வைத்தல் போல ஓரினமான பொருள்களை ஓரிடத்து வரிசைப்படச் சேர வைப்பது ஓத்து (இயல்) எனக் கூறுவர் புலவர். பெயரியல், வினையியல், வேற்றுமையியல் எனக் காண்க.

# படலம்

473. ஒருநெறி இன்றி விரவிய பொருளால்

பொதுமொழி தொடரின் அது படல மாகும். (164)

# படலம்

ஓரினநெறி என்பதின்றிப் பலவினப் பொருள்களான இலக்கணம் கூறக் கருதி அவற்றுக்குப் பொதுவான மொழித் தொடர்களால் கூறப்படின் அது படலம் ஆகும். தொல்காப்பியக் கிளவியாக்கம் முதல் எச்சவியல் வரை பல பொருள்களின் இலக்கணம் கூறப்பட்டு அவற்றுக்குப் பொதுப் பெயராகச் சொல்லதிகாரம் எனப் பொதுமொழி கூறப்பட்டது காண்க.

# பிண்டம்

474. மூன்றுறுப் படக்கிய தன்மைத் தாயின்

தோன்றுமொழிப் புலவர் அது பிண்டம் என்ப. (165)

# பிண்டம்

மூன்றுறுப்புகளைக் கொண்ட இயல்புடையதாயின் ஒரு நூல், அதனைப் பிண்டம் என்று புலவர் கூறுவர். மூன்று உறுப்பு என்பது சூத்திரம், ஒத்து, படலம் என்பன என்றும் இயல், இசை, நாடகம் என்பன என்றும் கூறுவர். சூத்திரங்கள் மட்டும் உள்ளது சூத்திரப்பிண்டம், சூத்திரமும் ஓத்தும் உள்ளது ஓத்துப்பிண்டம், சூத்திரம் ஓத்துப் படலம் மூன்றும் உள்ளது படலப்பிண்டம்.

# உரைவகை நான்கு

475. பாட்டிடை வைத்த குறிப்பி னானும்

பாவின் றெழுந்த கிளவி யானும்

பொருள்மரபில்லாப் பொய்ம்மொழி யானும்

பொருளொடு புணர்ந்த நகைமொழி யானும் என்று

உரைவகை நடையே நான்கென மொழிப. (166)

# உரைவகை நான்கு

உரைநடை வகை நான்கு என மொழிவர். 1. பாட்டிடை வைத்த குறிப்பினால் வருவது, பாடல்களின் இடை யிடையே வருவது. சிலப்பதிகாரத்தின் உரைப்பாட்டுமடை யிதுவாம். 2. பாவில்லாமல் உலகர் வழங்கும் வழக்கம், செய்யுள் உரைகளும் ஆம். 3. பொருள் மரபில்லாப் பொய்ம்மொழி பொருளொடு பொருந்தும் மரபில்லாத பொய்க்கூற்று. அது யானையும் குதிரையும் நட்பாடி வாழ்ந்தன என்பதுபோல் கூறும் கூற்று. திராட்சைப்பழமும் நரியும் இதுவே. 4. பொருளொடு புணர்ந்த நகைமொழி- பொய்யெனப்படாது மெய்யாகி நகுதற்கு ஏதுவாகும் உரை. அது தொடுகுறிசாத்திரம் போல்வன. ஒருவர் கூற்றை நகைத்து மறுத்துப் பின் பொருளொடு பொருந்தும் உரை கூறுவதும் இதுவே. பின்வரும் சூத்திரத்துக்கு அவரவர் தத்தம் உரைகளுக் கேற்றவாறு உரை கூறுவர். அவை நான்கிலும் அடங்கும் உரைநடைகள்.

# அந் நால்வகையும் இருவகை

476. அதுவே தானும் இருவகைத் தாகும்.

# அந் நால்வகையும் இருவகை

முன் சொல்லப்பட்ட நான்கனுள் முன் இரண்டும் ஒன்றாகவும் பின்னிரண்டும் ஒன்றாகவும் இருவகைப்படும் என்றுரைப்பர் பேராசிரியரும் நச்சினார்க்கினியரும். இளம்பூரணர் மைந்தர்க் குரைப்பனவும் மகளிர்க் குரைப்பனவும் என இருவகைப்படும் என்பர். மேற்சொல்லப்பட்ட உரைகள் மேலும் இருவகைத்தாகும் எனப் பொருள் கூறி அடுத்துவரும் சூத்திரம் அவ் விருவகை கூறுவதாகக் கொள்ளலாம்.

# இருவகைக்குரியார்

477. ஒன்றே மற்றுஞ் செவிலிக் குரித்தே

ஒன்றே யார்க்கும் வரைநிலை யின்றே. (168)

# இருவகைக்குரியார்

இதுவும் விளங்காப் பகுதியதே எனினும் பின்வருமாறு கூறலாம். ஒரு பகுதி உரை செவிலிக்குரியது, மற்றொரு பகுதி உரை யாவர்க்கும் உரியது. மேற்சொல்லப்பட்ட நான்கு உரைநடைகளுள் பொருளொடு புணர்ந்த நகைமொழியுரை செவிலிக்குரியது; மற்றைய உரைகள் யாவர்க்கும் உரிய என்பதாம். செவிலி எனவே நற்றாயும் கொள்க.

# பிசி

478. ஒப்பொடு புணர்ந்த உவமத் தானுந்

தோன்றுவது கிளந்த துணிவி னானும்

என்றிரு வகைத்தே பிசிநிலை வகையே. (169)

# பிசி

“பிறை கவ்வி மலைநடக்கும்" இது உவமையால் மருப்புடைய யானையை யுணர்த்தும். “நீராடான் பார்ப்பா னிறஞ்செய்யா னீராடின் ஊராடு நீரிற் காக்கை” இது நெருப்பைக் குறித்தது. பார்ப்பான் என்றது நெருப்பு. அது நீராடாது. அதன் நிறம் செம்மை; அது நீரில் நனையின் ஊர்க் காக்கை போல் கருமையாம் என்பது பொருள்.

# முதுமொழி

479. நுண்மையுஞ் சுருக்கமும் ஒளியு முடைமையும்

மென்மையும் என்றிவை விளங்கத் தோன்றிக்

குறித்த பொருளை முடித்தற்கு வரூஉம்

ஏது நுதலிய முதுமொழி யென்ப. (170)

# முதுமொழி

முதுமொழி என்பது, நுண்மை சுருக்கம் ஒளி மென்மை என்பவை விளங்கித் தோன்றுமாறு சொல்வான் தான் குறித்த பொருளை இத்தகையது என முடித்தற்கு ஏற்ப வரக்கூடிய காரணத்தைத் தன்கண் கொண்ட உரையாம் என்பர்.(உ - ம்) "உரைமுடிவு காணான் இளமையோன் என்ற நரைமுது மக்கள் உவப்ப நரைமுடித்துச் சொல்லால் முறை செய்தான் சோழன் குலவிச்சை கல்லாமற் பாகம் படும். இதில், குலவிச்சை கல்லாமல் பாகம் படும் என்பது முதுமொழி.

# முதுமொழி

இளையனாய போதே அரியணையேறிய கரிகாலனிடம் ஒரு வழக்கைக் கூறவந்த முதியோர், அவன் இளையன்; எவ்வாறு அனுபவமில்லாமல் வழக்கைத் தீர்ப்பான் என எண்ணியபோது, அவன் முதியான் போன்று நரைமுடித்து வந்து தீர்ப்பு வழங்கினான். இது கூற வந்த பொருள். இதில் உள்ள தடை இளையன் அனுபவம் இல்லாதவன் நீதி வழங்க முடியுமா என்பது. முடியாது. ஆனால் அவன் நல்ல தீர்ப்பு வழங்கினான்; முதியவர் உவப்ப வழங்கினான். இது முரணாகுமே எனின் அதற்குரிய காரணத்தைத் தன்கண் கொண்டு விடை தந்தது 'குலவிச்சை கல்லாமல் பாகம்படும் என்னும் பழமொழி.

# முதுமொழி

ஓரிடத்து ஒன்று நிகழ அதன் பயன் பிறிதோரிடத்து நிகழ்வதற்குத் தென்னை மரத்தில் தேள் கொட்டப் பனைமரத்தில் நெறிகட்டியது என்னும் பழமொழியை உலகினர் கூறுவதும் இதுவே. காலில் அடித்தான் வாயில் பல்போச்சாம் என்பதும் இது. வழுதியைக் கண்ட கண்ணை விட்டுவிட்டுப் பசப்பானது தோளில் பரவியது என்பதைக் கூறும் தலைவி, வயல் உளுந்தை ஊர்க்கன்று மேயக் கழுதைக் காதை யறுத்தானாம் என்ற பழமொழியைக் கூறுவதாக வந்த பாடலைப் பேராசிரியரும் நச்சினர்க்கினியாரும் காட்டுவர். அது, உழுத உழுத்தஞ்செய் ஊர்க்கன்று, கழுதை செவியரிந் தற்றே- வழுதியைக் கண்ட கருங்கண் இருப்பப் பெரும்பணைத்தோள் கொண்டன மன்னோ பசப்பு என்பது. பெரும்பாலும் வேற்றுப் பொருள் வைப்பணியும் இதன்பாற் சாரும்.

# மந்திரம்

480. நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளக்கும்

மறைமொழி தானே மந்திரம் என்ப (171)

# மந்திரம்

தாம் சொல்லும் சொல்லாற் பிறர்க்குப் பயன் பயந்தேவிடும் ஆற்றலுடைய மொழியினையுடையார் தமது ஆணையாற் சொல்லிய புறத்தார்க்குச் செவிப்புலனாகாமல் மறையும் சொல்லும் சொற்றொடருமே மந்திரம் என்பர். மந்திரம் தமிழ்மந்திரம். இது பிறரைச் சபிக்கவரின் அங்கதம் எனப்படும். முரணில் பொதியின் முதற்புத்தேள் வாழி பரண கபிலரும் வாழி - யரணிய லானந்த வேட்கையான் வேட்கோக் குயக்கோட னானந்தஞ் சேர்கசுவா கா "

# மந்திரம்

ஆரிய நன்று தமிழ்தீ தெனவுரைத்த காரியத்தாற் காலக்கோட் பட்டானைச்- சீரிய அந்தண் பொதியில் அகத்தியனா ராணையால்செந்தமிழே தீர்க்க சுவாகா " "சுவாகா என்பது தமிழ்மந்திரம். கொண்டான் என்னும் குயவனை நக்கீரர் முதற்பாடலால் சாவவும் அடுத்த பாடலால் பிழைக்கவும் செய்தார் என்பர் . சமயச்சார்பான கடவுள் மந்திரம் தன்பொருட்டுக் கூறப்படுவது. மந்திரங்களின் பொருளும் பயனும் வல்லார் வாய்க் கேட்டுணர்க.

# குறிப்பு

481. எழுத்தொடுஞ் சொல்லொடும் புணரா தாகிப்

பொருட்புறத் ததுவே குறிப்பு மொழியே. (172)

# குறிப்பு

ஓரெழுத்து மொழியோடும் தொடர்மொழியோடும் தொடர்ப் பொருளோடும் பொருந்தாமல் அவற்றின் பொருளின் புறத்தே தோன்றுவது குறிப்பு என்பர். (உ - ம் ) “பல்சான் றீரே பல்சான் றீரே பயனில் மூப்பிற் பல்சான் றீரே (புறம் .195) என்றது இகழ்ச்சிக் குறிப்பு. பெரும்பான்மையும், குறிப்பு மொழி இகழ்ச்சிப் பொருளிலேயே வரும் என்பாரும் உளர்.

# பண்ணத்தி

482. பாட்டிடைக் கலந்த பொருள வாகிப்

பாட்டின் இயல பண்ணத் தியே. (173)

# பண்ணத்தி

நான்கு பாவிலும் கலந்துவரும் பொருள்களே தனக்கும் பொருளாகி உரைநடை யாயினும் பாட்டின் இயல்போல வருவது பண்ணத்தியாம். பண்ணைத் தனக்கு முதன்மையாகக் கொண்டது பண்ணத்தி . தாழிசை துறை விருத்தங்களைப் பண்ணத்தியில் சேர்க்கலாம். தேவாரம், திருப்புகழ், திருவாய்மொழி , கீர்த்தனைகள் யாவும் பண்ணத்தியாம். பண் பாடுபவன் பாணன். பாணனால் பாடப்படும் இசைப்பாக்கள் பண்ணத்தியாம் என்க.

# பண்ணத்தி பிசிபோல்வது

483. அதுவே தானும் பிசியொடு மானும். (174)

# பண்ணத்தி பிசிபோல்வது

அப்பண்ணத்தியானது பிசியோடு ஒக்கும்; அதாவது இரு வகைப்படும். ஒருவகை பாணர் பாடுவது ; மற்றொருவகை விறலியர் ஆடிப் பாடுவது.

# பண்ணத்தி அடிவரையறை

484. அடிநிமிர் கிளவி ஈரா றாகும்

அடியிகந்து வரினுங் கடிவரை யின்றே. (175)

# பண்ணத்தி அடிவரையறை

பண்ணத்திக்குப் பேரெல்லை பன்னிரண்டடியாம்; அப்பன்னீரடியின் மாறுபட்டு மிக்கும் குறைந்தும் வரினும் நீக்கு நிலைமையில்லை. திருப்புகழ் அடிநிமிர்ந்தவாறு காண்க.

# புறனடை

485. கிளரியல் வகையிற் கிளந்தன தெரியின்

அளவியல் வகையே அனைவகைப் படுமே. (176)

# புறனடை

நூல், உரை, பாட்டு முதலானவற்றுக்குக் கிளந்து கூறிய இலக்கணவகையில் அடிவரையறை முதலிய வற்றை ஆராயின் அவற்றின் அளவுகளின் இயல் வகை இதுகாறும் கூறிய வகையே படும்.